(இ-ள்) கழுகுருவமாயிருக்கிறமுனிவர்களால்சொல்லக்கேள்விப் பட்டு அந்தப்பெரிய மலையினுடைய அடிநடுமுடியென்னு மிம் மூன்றிடத்திலும் குற்றமற மூன்றுசிவலிங்கந்தாபித்து ஆகமவிதிப் படிபூசைசெய்துவணங்கித்துதித்தான்—எ-று. (அ)

அன்புறத்துதிசெயுமரசன்பாதக
மின்புறச்சிரத்துநின்றெழுந்துகாகமாய்
வன்புறப்பறந்துநான்மறைக்குன்றத்தினுந்
தென்புறக்குன்றிடைச்சென்றுவீழ்ந்ததே.

(இ-ள்.) அன்புபொருந்தத்துதிசெய்கின்றஅவ்வரசனுடையபாத கமானது இன்பமடையும்படி சிரசில்நின்றும் காக்கைவடிவமாயெ ழுந்துவன்மையுறப்பறந்துவேதகிரியின்தென்திசைமலையில் போய் வீழ்ந்தது—எ-று- (கூ)

பொழிந்தனர்விண்ணவர்பூமழைக்குழா
மொழிந்தனரெண்ணிலாமுனிவராசிகள்
வழிந்தனர்கட்புனல்வணங்கிநோக்கின
ரொழிந்தனரில்லைபேருவகைவெள்ளமே.

(இ-ள்) தேவர்கள்பூமாரி மிகுதியாகப்பொழிந்தார்கள்-அளவில் லாதமுனிவர்கள்-ஆசீர்வசனங் கூறினார்கள் -அன்றியும் அங்கிருந்து பார்த்தவர்களெல்லாரும் ஆனந்தபாஷ்பம் பொழிந்து பணிந்து மிகுந்தசந்தோஷத்தில்நின்றும் நீங்காதவர்களானார்கள்——எ-று-(ய)

அந்தரதுந்துமிபார்த்ததன்னவன்
றந்திரங்களித்ததுதரணியன்றியும்
வெந்தெரிநிரயத்துமேனின்றேறின
சுந்தரமூவெழுசுற்றமுற்றுமே.

(இ-ள்) தேவதுந்துமிகளொலித்தன - அந்தஅரசனுடையசே னைகளிப்படைந்தது - அப்போதுகண்ட உலகத்தாரும் அவர்களு மன்றிஅவர்களுடைய இருபத்தொருதலைமுறையாரும் வெந்தெரிகி ன்றநரகத்தினின்றுமேறினார்கள்—எ-று. (யக)

அனையதுகண்டதிசயித்தமைச்சனுந்
துனைதருவிலிங்கமொன்றமைத்துத்தூயநீர்

புனைமலர்மாலையாற்பூசித்தேத்தினன்
வினைபெருவிளக்கெதிரிருளின்வீந்தவே.

(இ-ள்) அத்தன்மையைக்கண்டு அதிசயித்து மந்திரியானவன்-அப்போதேயொரு சிவலிங்கந்தாபித்துப் பரிசுத்தமுள்ள நீரினல் திருமஞ்சனஞ் செய்து மலர்மாலைகள்சாத்தி யருச்சித்துத்தோத்திரஞ்செய்தனன் - அப்பொழுதே அவனுடைய பாவங்களெல்லாம் பெரியதீபத்துக்கெதிரிலிருள் மாய்வதுபோலமாய்ந்தன—எ-று.

(வேறு) காவிதியோடந்தமறைக்கிரியிழிந்துகொடி நுடங்குங்கனகமாடத், தூவிமதிற்போலன்கோயில்வீதிமணிமாளிகையுந் தொகுத்துஆதூர், மேவியதொல்வளம்புதியவளமாக்கித் தைப்பூசவிழாக்கண்டேத்திப், பாவியனுய்ந்தனனென்னுச் சம்பாதிமாதவர்தம்பதத்தின்வீழ்ந்தான்.

(இ-ள்)மந்திரியுடன் அந்தவேதகிரியினின்றுமிழிந்துமேலே கொடிகள்அசைந்துகொண்டிருக்கும் படியாகிய சொர்ணமயமானவீடுகளும் மதில்களுங்கோபுரங்களும் பொன்னிறக் கோயில்களும் வீதிகளும் -திருமாளிகைப் பத்தியையுமேற்படுத்திப் பழமையாகிய அந்தக்ஷேத்திரத்தில் பொருந்தியமுன்வளங்களை யெல்லாம்புதியவளமாகச் செய்வித்துத் தைப்பூசநக்ஷத்திரத்தில் திருவிழாநடத்தித் தரிசித்துப் பாவியேனுகிய நான்உய்ந்தேனென்று - சம்பு-ஆதியென்னு மவ்விரண்டுமுனிவர்களுடைய பாதங்களில்வணங்கினன்.

தங்களிருபதம்பணிந்தசுரகுருவைச்சம்பாதிதவத்தோர்நோக்கித்
திங்களெனுமொருகுடைக்கீழ்ப்புவிகாத்துப்பரகதியின்சேர்
கென்றேத்த, வங்கெதிருங்கடலுமெனச்சேனையொடுமல்லையிற்
போயமைச்சனேடு,மங்கலமும்முரசார்ப்பநிலம்புரந்துபோந்து
சிவன்மருங்குவாழ்ந்தான்.

(இ-ள்) தங்களுடைய இரண்டுதிருவடிகளையும் பணிந்தசுரகுருராசனைச்சம்பாதி யென்னுமுனிவர்கள் பார்த்துச்சந்திரனென்று சொல்லும்படியான ஒற்றைக்குடைநிழலி லிவ்வுலகத்தைக்காத்துப் பின்பு பரகதியைச்சேரக்கடவை யென்று வாழ்த்திவிடைகொடுக்க அரசனானவன் சமுத்திரம்போன்ற சேனையுடன் தன்னுடையராசதானியாகிய மல்லைநகரத்தில் மந்திரியுடன் போய்ச்சேர்ந்து மங்க

ளமுள்ளமும்முரசங்களும் சதாகாலம் ஆரவாரிக்கும்படி அரசாட்சி
செய்து அதற்குமேல்சாமீப்பிய பதம்பெற்றுவாழ்ந்தான்—எ-று.
(மும்முரசாவன-மணமுரசு-ரணமுரசு-செயமுரசுஎன்பவை.)

என்றிசைத்துவிழி மூடிமகிழ்ந்தானந்தக்களிதிளைப்பவிருந்
தான்சூத, னன்றிசைத்தான்சூதனமக்கென நைமிசாரணிய
நல்லோரெல்லாம், வென்றிபடைத்தனம்பாவக்கடலுடைந்
துய்ந்தனங்கதியும்விளைந்ததென்று, வொன்றியபத்தியராயிக்
கழுக்குன்றேசிவமெமக்கென் றுளத்திற்கொண்டார்.

(இ-ள்-) சூதமகாரிஷியானவர் இவ்வாறுசொல்லிக்கண்களைமூடி
க்கொண்டு ஆநந்தக்களிப்புண்டாகத்தியானத்திலிருந்தார் - இவரி
வ்வாறிருக்க நைமிசாரணிய முனிவர்கள்இந்தச்சூதமுனிவர் திருக்
கழுக்குன்றச்சரித்திரத்தை நமக்குநன்றாகச்சொல்லினர் -அதைக்
கேட்டுநாம்வெற்றியடைந்தோம்பாவக்கடலு டைந்து உய்ந்தோம்
மோக்ஷசாம்பிராச்சியமும் கிடைத்ததென்று மிகுந்தபக்தியுள்ள
வர்களாய்த் திருக்கழுக்குன்றமே நமக்குப் பரமசிவமென்று உள்
த்திற்கொண்டார்கள்—எ-று. (யசு)

இன்னதிருக்கழுக்குன்றப்புராணத்தையிசைத்தோர் மற்றிசை
யென்றோரு, மன்னசுவை செவிக்கொண்டோர் வரைந்தோருங்
கயிற்றோடலகமீந்தோர், நன்னரருச்சனைபுரிந்தோர் வேதமருச்சி
த்ததொருநாதன்பாதத், துன்னருமுத்தியும்பெறுவர்மறுமையில
டிமையிற்செல்வத்துவகைகூர்வார்.

(இ-ள்,) இந்தமைமையுள்ள திருக்கழுக்குன்றப்புராணத்தைச்சொ
ல்லுகின்றவர்களும் - சொல்லுமென்றவர்களும்- அந்தச்சரித்திரமா
துரியத்தைக்காதினாற்கேட்பவர்களும் - எழுதினவர்களும்அந்தப்பு
த்தகத்துக்குமையிட்டுக்கயிறுகோத்து கொடுப்பவர்களும்-அன்றி
யும்இந்தப்புராணத்தை நன்மையுடன் பூசித்தவர்களும் -வேதங்களா
பூசிக்கப்பட்ட வேதகிரீசருடைய திருவடிகளில் கிடைப்பதற்கரிய
மோக்ஷம்பெறுவார்கள் - இப்பிறப்பிற்செல்வமுள்ளவர்களாயிரு
ப்பார்கள்—எ-று. [சூதருச்சருக்க முற்றியது.] (யசு)

சருக்கம் - உரு - திருவிருத்தம்-அருஉ

திருச்சிற்றம்பலம்,

